13th August 1960]

**Sri P. G. MANICKAM :** ஸார், பஸ்களுடைய கட்டண விதங்களும் மாற்றியமைக்கப்படுமா? அப்படி மாற்றியமைக்கும்போது குறையுமா அல்லது அதிகமாகுமா?

**The Hon. Sri V. RAMAIAH :** இப்போது இருக்கக் கூடிய அணு பைசாவை நயா பைசாவாக மாற்றியமைப்பதென்பதுதான் இப்போதைய யோசனை. அதைத்தான் நான் ஆரம்பத்தில் சொன்னது போல ஸ்டேட் அட்வைஸரி கமிட்டியின் முன்பு வைத்திருக்கிறோம், அவர்களுடைய ஆலோசனைக்கு.

*Raw film factory*

* 178 Q.—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state the date on which the proposed Raw Film Plant at Ootacamund will be started?

The Hon. Sri R. VENKATARAMAN : This Government have no information as to the date on which the project will be commissioned.

Sri A. A. RASHEED : Sir, may I know whether this Government have got at least information relating to the capacity of the proposed **Raw Film Plant?**

The Hon. Sri R. VENKATARAMAN : No, Sir.

**Sri J. MATHA GOWDER :** எப்போது நிறுவப்படும் என்று சொல்ல முடியவில்லை என்றாலும், நிச்சயமாக உதகையில் கச்சா பிலிம் தொழிற்சாலை ஆரம்பிக்கப்படும் என்ற உறுதிமொழி கொடுக்க முடியுமா?

**The Hon. Sri R. VENKATARAMAN :** நீலகிரி ஜில்லாவிலே, ஊட்டிக்கு ஐந்து மைலுக்கு அருகாமையில் இடம் ஏற்பாடாகி விட்டது. இன்னும் "காண்டூர் சர்வே" யெல்லாம் நடந்துகொண்டிருக்கிறது.

*Luggage-carriers in buses*

* 179 Q.—Sri P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

பிரயாணிகள் தங்களுடைய சாமான்களை வைத்துக்கொள்வதற்காக எல்லா பஸ்களிலும் மேல் தட்டுகள் அமைக்கப்பட வேண்டும் என்று சர்க்கார் உத்தரவு போட உத்தேசமுண்டா?

The Hon. Sri V. RAMAIAH : The answer in the negative.

Sri P. G. MANICKAM : ஸார், தற்போது புதிதாகக் கட்டப்பட்டு வரும் பஸ்களில் பிரயாணிகள் அவர்களுடைய சாமான்களை வைத்துக் கொள்வதற்காக மேல் தட்டுகள் அமைக்கப் பட்டிருக்கின்றன. பழைய பஸ்களில் மேல் தட்டுகள் அமைக்கப் படாமல் அநேக பஸ்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. அம்மாதிரி பஸ்களில் மேல் தட்டுகளை அமைக்கும் திட்டத்தை சர்க்கார் கையாளுவார்களா?